REGD. NO. M. 6311 ★ தனி இதழ் 0—1—0 அணா ★ இலங்கையில் 10 சதம் ★ PHONE: 35630

# நம் நாடு

தி.மு.க. தின இதழ் ஆசிரியர் இரா. நெடுஞ்செழியன்

The "Nam Nadu" A Tamil Daily. ★ The Official Organ Of The D.P.F.

மலர் 4) சென்னை: தை 17உ புதன் (30—1—57) ★ ★ வெளியீடு: தை 18உ வியாழன் (31—1—57) [இதழ் 200

## மந்திரியென்றால் இவரன்றோ!

சூரத், ஜன. 29—

விலைகள் ஏறிவிருக்கின்றனவே! அவற்றைக் கட்டுப்படுத்துவது எப்படி? மந்திரிகளைக் கேட்டால் ஆளுக்கொரு வழி சொல்லுகிறார்கள் அல்லவா? அப்படிப் பதில் தருவதில், 'மந்திரி என்றால் இவரன்றோ மந்திரி' என்று கூறத்தக்க வகையில் மந்திரி ஒருவர் வழி கூறியிருக்கிறார்.

அநியாயமாக விலைகளை ஏற்றும் வியாபாரிகளிடம் மக்கள் சாமான்களை வாங்கக் கூடாதாம்!

இந்த அரிய யோசனையை, மத்திய மந்திரி மொரார்ஜி தேசாய் இங்கு கூறியிருக்கிறாராம்!

# 'நாட்டை ஆள வந்தவர்கள் நல்லவர்களாக இருந்திருந்தால்'

## 'அரசாங்க ஊழியர் சம்பள ஏற்றத்தாழ்வை முதலில் நீக்கி இருக்க வேண்டும்'

### 'கிளர்ச்சிசெய்ய கழகம் தூண்டாது'

### 'தூண்டும் நிலை ஏற்பட்டால் இறுதிவரை அவர்களைக் கைவிடாது'

*அரசாங்க ஊழியர் மாநாட்டில் அண்ணா அறிவுரை*

மதுரை, சன. 30—

"நாட்டை ஆளவந்தவர்கள் நல்லவர்களாக இருந்திருந்தால் அரசாங்க ஊழியர்களிடையே சம்பள விகிதத்திலுள்ள ஏற்றத்தாழ்வை முதலில் நீக்கியிருக்க வேண்டும். முதலாவது ஐந்தாண்டுத் திட்டத்திலேயே இச்சிக்கலுக்குப் பரிகாரம் கண்டிருக்கவேண்டும்.

"அரசாங்க ஊழியர்களைக் கிளர்ச்சி செய்யத் தூண்டும் பணியில் தி. மு. கழகம் ஈடுபடாது. அப்படித் தூண்டும் நிலை ஏற்பட்டு விட்டால் இறுதிவரை அவர்களைக் கைவிட்டுவிடாது. ஏனென்றால், நான் பொறுப்பு வகிக்கும் கட்சி ஒருகாலத்தில் ஆட்சிக்கு வரும் என்ற நம்பிக்கை கொண்டிருக்கிறேன்"

என்று, 27-ந் தேதியன்று, மதுரையில் நடைபெற்ற மாநில அரசாங்க அலுவலர்களின் (என். ஜி. ஓ.-வினர்) மாநாட்டில் அண்ணா அவர்கள் பேசுகையில் குறிப்பிட்டார்.

'சென்னை அரசாங்க அலுவலர்களின் அல்லல்களை அகற்றுகின்றன என்று அரசாங்கத்தினரைக் கேட்டுக்கொண்டு மேலும் அண்ணா அவர்கள் பேசியதாவது:—

"அமைச்சர்கள் அரசாங்க அலுவலர்களாக வேண்டுமானால் அனுபவம் வேண்டும்; ஆனால், அலுவலர்கள் அமைச்சர்களாக வேண்டுமானால் சிறிது அதிர்ஷ்டம் இருந்தால் போதும்!

"நாட்டில் அரசாங்க அலுவலர்களிடையே இன்று நேற்று அல்ல—பல ஆண்டுகளாகவே அல்லல் இருந்து வருகிறது. அந்த அல்லலைப் போக்க வேண்டுமானால் அரசாங்க அலுவலர்களின் உள்ளத்தில் ஏற்படும் ஆசையும் அச்சமும் அகலவேண்டும்.

"நாட்டில் விலைவாசிகள் உயர்ந்துகொண்டே இருக்கிறது என்பது அமைச்சர்களுக்குத் தெரியாததல்ல. தற்சமயம், 'பஞ்சப்படி' என்று சம்பளத்துடன் கொடுக்கும் பணத்தை முழுவதும் சம்பளமாகவே கொடுத்து விடுவதன் மூலம் இந்த நாடு பஞ்ச நாடு அல்ல என்பதையாவது வெளி உலகுக்குக் காட்டவேண்டும்."

"நாட்டில் வருமானமுள்ள தொழில்கள் அனைத்தையும் தேசியமயமாக்கினால் வரி விதிக்காமலேயே நாட்டு மக்களின் சிக்கலைத் தீர்க்க முடியும்.

"அரசியலைப் பற்றி மாணவர்களும், அரசாங்க அலுவலர்களும நன்றாக அலசிப் பார்க்கத்தான் வேண்டும். அரசியல் கிளர்ச்சியில் பங்கு கொள்ளக்கூடாது என்று வேண்டுமானால் சொல்லுங்கள்—ஏற்றுக்கொள்கிறோம். கடவுள் எவ்வாறு எங்கும் நிறைந்துள்ளாரோ அதைப் போல் கடவுளுக்கு அடுத்தபடியாக நாடெங்கும் பரவியுள்ள சக்தி அரசியலாகும். மாணவர்களும், மற்றவர்களும அரசியலைப் பற்றி நினைக்காவிட்டாலும், அரசியல் அவர்களை விட்டு விடாது. அரசியலைப் பற்றி அனைவரும் சிந்திக்கலாம; அதில் தவறில்லை."

## விமானப் போக்குவரத்துத் தொழிலாளர் வேலைநிறுத்தம்

பம்பாய், ஜன 28—

பம்பாய் பிரதேச விமானப் போக்குவரத்து நிறுவன ஊழியர்கள், வரும் பிப்ரவரி 15-ந் தேதியன்று ஒரு நாள் அடையாள வேலைநிறுத்தம் செய்யப்போவதாக நிறுவனத்தாருக்கு 'நோட்டீஸ்' வழங்குவர் என்று தெரியவருகிறது.

சங்கச் செயற்குழுவில் இம்முடிவு மேற்கொள்ளப்பட்டிருக்கிறது.

## டாக்டர் இலட்சுமணசாமி அவர்களின் பலதுறைப் பணிகள்

*பிறந்த நாள் விழாவில் மத்திய மந்திரி பாராட்டு*

சென்னை, சன. 29—

"சென்னைப் பல்கலைக் கழகம், மிகப் பெருமைக்குரிய பலரைப் பெற்றுத் தந்திருக்கிறது என்றாலும், டாக்டர் ஏ. இலட்சுமணசாமி (முதலியார்) அவர்களைப்போல எவரும் அவ்வளவு அதிகமான மதிப்பைப் பெறவோ நினைவிலிருத்தவோ முடியாது"

என்று டாக்டர் ஏ. இலட்சுமணசாமி அவர்களது உருவப் படத்தைத் திறந்துவைத்துப் பேசுகையில் மத்திய சுகாதார மந்திரி இராஜகுமாரி அமிர்தகௌரி அவர்கள் குறிப்பிட்டிருக்கிறார்கள்.

### பிறந்த நாள்

டாக்டர் ஏ இலட்சுமணசாமி அவர்களின் 71-வது பிறந்த நாள் விழாவை ஒட்டியே இந்த நிகழ்ச்சி நடைபெற்றது.

பேராசிரியர் பி. டி. சாமிநாத முதலியார் அவர்கள் தலைமையில் அமைந்துள்ள பிறந்த நாள் விழாக் கமிட்டியினர் இந்த நிகழ்ச்சிகளை ஏற்பாடு செய்தனர்.

### நான் மந்திரி!

"நான் மந்திரியான போது எனக்கு நிர்வாகம் பற்றியோ மருத்துவம் பற்றியோ எதுவும் தெரியாது. பணியாற்றவேண்டும் என்ற விருப்பம் மட்டுமே இருந்தது. டாக்டர் இலட்சுமணசாமி போன்றவர்களின் உதவியைத்தான் நாடவேண்டியிருந்தது. அப்போது டாக்டர் இலட்சுமணசாமி அவர்களிடமிருந்து தான் நான் உதவியும் ஆலோசனையும் அதிகமான அளவுக்குப் பெற்றிருக்கிறேன் என்று பெருமையோடு கூறிக்கொள்கிறேன்"

என்றும் இராஜகுமாரி அமிர்தகௌரி அவர்கள் கூறியிருக்கிறார்.

### புத்தகம்

டாக்டர் இலட்சுமணசாமி அவர்கள் பல்வேறு சந்தர்ப்பங்களில கல்வி, மருத்துவம், கலாச்சாரம் ஆகியவை பற்றி ஆற்றிய சொற்பொழிவுகளைத் திரட்டி ஒரு புத்தகமாக உருவாக்கி இந்த விழாவின் போது வெளியிட்டிருக்கின்றனர்.

## 11 அறிஞர்களுக்குக் கௌரவப் பட்டம்

*சென்னை பல்கலைக்கழக நூற்றாண்டு விழா நிகழ்ச்சி*

சென்னை, சன. 29—

'இந்தியா'வைச் சேர்ந்த ஏழு பேர்களுக்கும், வெளிநாடுகளைச் சேர்ந்த நால்வருக்கும் சென்னைப் பல்கலைக் கழக நூற்றாண்டு விழாவை ஒட்டி இன்று காலை நடைபெற்ற விசேடப் பட்டமளிப்பு விழாவின்போது கௌரவப் பட்டங்கள் வழங்கப்பட்டன.

### விவரங்கள்

லண்டன் பல்கலைக் கழகத் தலைவர் டாக்டர் டி. டபிள்யூ. லோகான், கனடா, மேற்கு ஒன்டோரியோ பல்கலைக் கழகத் துணைவேந்தர் டாக்டர் ஜி. ஈ. ஹால், அமெரிக்காவில் நியூஜெர்சி பல்கலைக் கழகத் தலைவர் டாக்டர் ராபர்ட் எப். கோஹீன், அமெரிக்காவில் பென்சில்வேனியா பல்கலைக் கழகத்தில் 'சமமொழி'ப் பேராசிரியராயிருக்கும் டாக்டர் வில்லியம் நார்மன் பிரௌன் ஆகிய நால்வரும் கௌரவப் பட்டம் பெறும் வெளிநாட்டினராவர்.

டாக்டர் எஸ். இராதாகிருஷ்ணன், டாக்டர் சி. பி. இராமசாமி அய்யர், டாக்டர் ஏ. இராமசாமி முதலியார், ஆர்.பி. சேதுப்பிள்ளை, சர். முகம்மது உஸ்மான், டாக்டர் எம். ஆர். குருசாமி முதலியார் ஆகிய எழுவரும் கௌரவப் பட்டம் பெற்றனர்.

பல்கலைக் கழக வேந்தர் ஏ ஜே. ஜான், இவர்களுக்குக் கௌரவப் பட்டம் வழங்கினார்.

பட்டம் வழங்கப்பட்ட பின்னர் டாக்டர் எஸ். இராதாகிருஷ்ணன் அவர்கள் நூற்றாண்டு விழாப் பேருரை நிகழ்த்தியிருக்கிறார்.

## பாகிஸ்தானில் நேருவின் கொடும்பாவி கொளுத்தப்பட்டதாம்

### டில்லியின் ஆட்சேபக் குறிப்பு

கராச்சி, சன 29—

பாகிஸ்தான் நகரங்கள் பலவற்றில் கடந்த 26-ந் தேதியன்று ஆர்ப்பாட்டக்காரர்கள் சிலர், பண்டித நேருவின் கொடும்பாவி கொளுத்தியது போன்ற பல காரியங்களைச் செய்ததை வன்மையாகக் கண்டித்து டில்லி சர்க்கார், பாகிஸ்தான் சர்க்காரிடம் ஆட்சேபக் குறிப்பு ஒன்றைக் கொடுத்திருக்கிறார்கள் என்று தெரிகிறது.

### ஐ. நா. - வில்........

ஐ நா. பாதுகாப்புச் சபையில் இன்று காஷ்மீர் விவகாரம் தொடர்ந்து விவாதிக்கப்படும் என்று அறிவிக்கப்பட்டுள்ளது. இப்போது பிரிட்டன், காஷ்மீர் விவகாரத்தை பாகிஸ்தான் கண்ணோட்டத்திலிருந்து அணுகுவதாகத் தகவல் தரப்படுகிறது.

## சுராவர்த்தியின் கொடும்பாவி ஆக்ராவில் கொளுத்தப்பட்டது

*பதிலுக்குப் பதில் செய்யும் ஆக்ரா மாணவர் போக்கு*

ஆக்ரா, சன. 30—

இங்கு சுமார் 10,000 மாணவர்கள் ஊர்வலமாக வந்து, பாகிஸ்தான் பிரதமர் சுராவர்த்தியின் கொடும்பாவியைக் கட்டியிழுத்துக் கொளுத்தினராம்!

பண்டித நேருவின் கொடும்பாவி பாக். ஆர்ப்பாட்டக்காரரால் கொளுத்தப்பட்டதற்குப் பதிலாகவே இப்படிச் செய்ததாக அவர்கள் கூறினராம்!

நாகபுரியிலும் 'காஷ்மீர்' தினம் அனுஷ்டிக்கப்பட்டதுடன் ஆயிரக்கணக்கான மாணவர்கள் வேலைநிறுத்தம் செய்து, பாக். பிரதமர் சுராவர்த்தி, வெளிநாட்டு மந்திரி நூன் ஆகியோரின் 'கொடும்பாவி'களைக் கொளுத்தினராம்.

இந்தியாவில் ஆண்டுதோறும் சுமார் 50,000 டன் முந்திரிப் பருப்பு உற்பத்தியாகிறது; அதில் சுமார் 80,000 டன் வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்படுகிறது.

## மன்னர் பரம்பரை பழக்கம் மாறுகிறது!

லண்டன், ஜன. 29—

பரம்பரைப் பழக்கத்திற்கு மாறாக பிரிட்டிஷ் அரசகுமாரன் சார்லஸ், இன்று பள்ளிக்கூடத்திற்கு அனுப்பிவைக்கப்பட்டிருக்கிறான்.

அரசகுமாரர்களுக்குத் துவக்கக் கல்வி அரண்மனையிலேயே நடைபெறுவது பரம்பரைப் பழக்கம்; ஆனால், இராணியும் எடின்பரக் கோமகனும் கொண்டுள்ள காலத்திற்கேற்ற கருத்தினால் சார்லஸை அரண்மனைக்கு வெளியே உள்ள தனிப்பட்டோர் பள்ளி ஒன்றுக்கு அனுப்பியுள்ளனர்.

## நடமாடும் பல் வைத்திய விடுதி அன்பளிப்பு

### சென்னைக்கு செக் அரசாங்கம் அளித்திருக்கிறது

சென்னை சுகாதார இலாகாவுக்கு நடமாடும் பல் வைத்திய விடுதியொன்றை செக் அரசாங்கம் அன்பளிப்பாக இந்திய துணைத் தலைவர் இராதாகிருஷ்ணனிடம் அளித்திருக்கிறது.

நம் நாடு
தி.மு.க. தின இதழ் ஆசிரியர்: இரா. நெடுஞ்செழியன்
சென்னை 30—1—'57 புதன்

# அழகேசன் ஏசல்!

"காங்கிரசார் தேர்தல் பிரச்சாரத்தைத் தரங்குன்றாமல் நடத்தவேண்டும்;

"கசப்பை வளர்க்கக்கூடிய தனிப்பட்டவர்களைத் தாக்கும் இழிமுறைகளை விட்டொழித்துத் தேர்தல் பிரச்சாரத்தில் ஈடுபடவேண்டும்.

"ஒவ்வொரு காங்கிரசாரும் நல்லொழுக்கத்திற்கு ஒரு உயரிய எடுத்துக்காட்டாகத் திகழவேண்டும் என்பதை எப்பொழுதும் நினைவில் வைத்துக்கொண்டு தரம் குறையாமல், எதிர்த்து நிற்கும் அபேட்சகர்களைத் தனிப்பட்ட முறையில் இழிவுபடுத்திப் பேசாமல், இந்தப் பிரச்சாரத்தைச் செய்யவேண்டும்."

இப்படி இந்தூர் காங்கிரசு மாநாடு, உலகில் எந்த அரசியல் கட்சியும் இதுவரையில் போட்டிடாததும், காங்கிரசு மாநாடுகளிலேயும்கூட இதுவரை போடப்படாததுமான தேர்தல் பிரச்சார இலட்சியத் தீர்மானம் ஒன்றைப் போட்டிருக்கிறது. இதை நோக்கும் எவருக்கும், இப்படி ஒரு தீர்மானத்தை நிறைவேற்றுவதற்கான தேவை காங்கிரசுக் கட்சிக்கு இப்பொழுது ஏன் ஏற்பட்டு இருக்கிறது என ஆராய வேண்டும் என்ற ஆசை ஏற்படத்தான் செய்யும்.

இதுபோன்ற ஒரு தீர்மானத்தை மாநாட்டில் நிறைவேற்றுவதற்குரிய காங்கிரசுத் தலைவர்களின் உள்ளெண்ணம் எதுவாக இருந்தபோதிலும், தீர்மானத்திற்கு மதிப்பளித்து நடந்துகொள்ள வேண்டும் என்ற நல்லெண்ணத்துடன்தான், இத்தீர்மானத்தைக் காங்கிரசுத் தலைவர்கள் நிறைவேற்றி வைத்திருக்கிறார்கள் என்றே நாம் கருதிக் கொள்ளுவோம்.

மேற்படி தீர்மானத்தை முன்மொழிந்தும் வழிமொழிந்தும் இருப்பவர்கள் சாதாரண காங்கிரசு ஊழியர்களல்லர். அப்படி இருந்தாலாவது, அத்தீர்மானம் குறித்து நாம் வேறு கருத்தைக் கொள்ளுவது சாத்தியமாகும். ஆனால் தீர்மானத்தைக் கொண்டுவந்து ஆணித்தரமாக ஆதரித்துப் பேசி இருக்கும் காங்கிரசுத் தலைவர்களோ மிகமிகப் பெரும் தலைவர்களாவர். எனவே, அத்தகு பெருந்தலைவர்களால் முன்மொழியப்பட்டும் வழிமொழியப்பட்டும் ஒருமனதாக நிறைவேற்றி வைக்கப்பட்டுள்ள ஒரு தீர்மானத்தை, மதிப்பளித்துச் செயலாற்ற வேண்டும் என்ற உயர்ந்த எண்ணத்துடன்தான் நிறைவேற்றப்பட்டு இருக்கிறது எனக் கருதிக் கொள்வதுதானே நியாயமானதாகும்?

"தேர்தல் பிரச்சாரத்தை மிகவும் உயர்வான முறையில் காங்கிரஸ்காரர்கள் நடத்தவேண்டும்.

"எதிர்க்கட்சி அபேட்சகர்களை தனிப்பட்டமுறையில் தாக்கக் கூடாது."

இவ்வாறு, தெளிவாக தீர்மானத்தை முன்மொழிந்தவர் விளக்கம் தந்து பேசியிருக்கிறார். இப்படிப் பேசியிருக்கின்றவர்தான் காங்கிரசுக் கட்சியின் தேர்தல் பொறுப்பை ஏற்றுக் கொண்டிருப்பவராவார். அவர், ஏற்கனவே இரயில்வே அமைச்சராக இருந்து, அரியலூர் விபத்தைக் காரணங்காட்டி, தனது பதவியைத் துறந்துள்ள லால்பகதூர் சாஸ்திரி அவர்கள் ஆவார்.

காங்கிரசுத் தேர்தல் பொறுப்பாளர் முன்மொழிந்த அளவுடனும் மேற்படி தீர்மானம் நிறைவேற்றப்பட்டு விடவில்லை. நேரு பெருமகனும் அத்தீர்மானத்திற்குக் கருத்துரை விருந்தியுரை தந்து ஆதரித்துள்ளார். அவர் கூறியுள்ள விளக்கமாவது:—

"தீர்மானம் மிகவும் முக்கியமானது. கொள்கைகள், வேலைத் திட்டங்களின் அடிப்படையில் தேர்தல் பிரச்சாரம் நடைபெற வேண்டுமே ஒழிய, தனி நபர்களைத் தாக்குவதின் மூலமல்ல.

"காங்கிரசுக்காரர்கள் தம் வேலைத் திட்டங்களையும், கொள்கைகளையும், வாக்காளர்களுக்கு விளக்கிச் சொல்ல வேண்டும்.

"பயனற்ற, ஆட்சேபகரமான கண்டனங்கள் கூடாது.

"தேர்தல் பிரச்சாரம் முழுதும் அமைதியாக இருக்க வேண்டும்.

"அரசியலில் அறநெறிகளைப் புறக்கணிக்கக் கூடாது."

காங்கிரஸ் தேர்தல் அதிகாரியான லால்பகதூர் அவர்களும் இந்தியப் பிரதமர் நேரு அவர்களும், தீர்மானத்தின் முக்கியத்துவத்தை வற்புறுத்திய அளவில் தீர்மானம் நிறைவேற்றப்பட்டுவிட்டது என்றம்பாதும், மாநாட்டின் தலைவர் தேபர் அவர்களும் தனது தலைமையுரையில், தீர்மானத்தின் சாரத்தைச் சுட்டிக்காட்டியுள்ளார்.

அவர் கூறியிருப்பது, இது:—

"பிரச்சாரத்தை உயர்ந்த முறையில் நடத்துவதற்கு ஒவ்வொரு காங்கிரசுக்காரரும் முயற்சிப்பாரென்று நம்புகிறேன். மக்களுக்குச் சம்பந்தமுள்ள பிரச்சனை பற்றியே பேசவேண்டும்.

"மற்றுக் கட்சிகளைக் குறை கூறும்போதுகூட, அவைகளுடைய வேலைத் திட்டங்களைப் பற்றித்தான் பேச வேண்டும்.

"எந்தத் தனி நபரையும் தாக்கிப் பேசுவது என்பதே கூடாது.

"சண்டை பூசல்களைத் தூண்டிவிடுவதாக இருக்கக் கூடாது."

"தேர்தல் பிரச்சாரம் என்பது பொதுஜன அபிப்பிராயத்தை உருவாக்கும் முறையில் இருக்கவேண்டும்."

தேர்தல் பிரச்சார இலட்சியத் தீர்மானமும் முப்பெரும் காங்கிரசுத் தலைவர்களின் விளக்க உரைகளும், தேர்தல் பிரச்சாரத்தில் ஈடுபடும்பொழுது காங்கிரசுத் தலைவர்கள் செயல்படவேண்டிய புனிதத்தை வற்புறுத்துகிறது.

தீர்மானம் வரவேற்கத்தக்கது — செயலாற்றத்தக்கது காங்கிரசுத்தலைவர்களின் விளக்கம், பாராட்டுதற்குரியது — அப்படியே பின்பற்றத்தக்கது.

இத்தேர்தல் பிரச்சார இலட்சியக் கட்டளையை, எந்த அளவு இங்குள்ள காங்கிரசுத் தலைவர்கள் எனப்படுவோர் பின்பற்றி நடந்துகொள்ளுகின்றனர்—நடந்துகொள்ளத் தயாராக உள்ளனர் என்பதை சிறிது ஆராய்வோம்.

தீர்மானம் கட்டளை இடுகிறது!

'தேர்தல் பிரச்சாரத்தைத் தரம் குன்றாமல் நடத்து'

'கசப்பை வளர்க்காதே'

'தனிப்பட்டவர்களைத் தாக்காதே'

இழிமுறைகளை விட்டொழி'

இவ்வாறெல்லாம் தீர்மானம் கண்டிப்பான ஆணை பிறப்பித்திருக்கிறது!

இங்கு பூவிருந்தவல்லியில், காஞ்சியில், நாசரத்பேட்டையில், அமைச்சர் அழகேசனார் தம் குரல்வளையைக் கண்மாபாக்கி, மூக்கைத் துளைக்கும் சாக்கடையைத் திறந்துவிடுவதில் தீவிரமாக ஈடுபட்டுள்ளார். அவருடைய இழி செயலுக்கு, இளங்கன்றின் துள்ளலுக்கு, வேலி கட்டி, அவனையும் தோற்கடிக்கும் வகையில் தேர்தலில் போட்டியிடும் தனிப்பட்ட நபர்களைத் தூற்றிவருகிறார், அவருடைய சகலராம 'பத்துவட்சம்' பக்தவத்சலனாரும்!

இந்தூர் தீர்மானமோ 'ஒவ்வொரு காங்கிரசுக்காரரும் நல்லொழுக்கத்திற்கு ஒரு உயரிய எடுத்துக்காட்டாகத் திகழ வேண்டும்' என்று இடித்துக் கூறுகிறது. ஆனால், அமைச்சர் அழகேசனாரோ, நமது கழகத் தலைவர்களின் பெயர்களைக் கூறி, அப்பெயர்களின் முன்பாதியைத் துண்டித்துவிட்டு, தமக்கு மிகமிக விருப்பமான இழிசொல்லை இணைத்து அழகுபடப் பேசி, பேச்சழகராகத் திகழ்ந்துவருகிறார்!

'தனிப்பட்ட நபர்களை இழிவுபடுத்தப் பேசக்கூடாது' எனத் தீர்மானம் கட்டளையிட்டிருப்பதற்கு மாறாக — முரணாக, அமைச்சர் அழகேசனார் தனிப்பட்ட நபர்களை, மல்லாந்து படுத்து காறி உமிழ்ந்து கொள்ளும் பணியைச் செய்துவருகிறார்!

கன்னக்கோல் கயவன் ஒருவன் தண்டனைக்காலம் முடிந்து சிறையிலிருந்து வெளியேறும்பொழுது, சிறை அதிகாரியின் நற்போதனையைக் கேட்டுக்கொண்டு, மீண்டும் வாய்ப்பு கிடைத்ததும் கன்னியின் காதலியைக் களவாடி உயிர் வாழ்ந்து வருவது போன்றே, இந்தூர் இதோபதேசத்திற்குப் புறகும், தனது சிறுமையை இயல்பை விட்டொழிக்காது, தனிப்பட்ட நபர்களை இழிவுபட ஏசிப்பேசி வருவதும் அமைந்திருக்கிறது என்றுதான சம்பந்தப்பட்ட தொகுதி வாக்காளர்கள் உறுதியாக மதிப்பிட்டுக்கொள்ளுவர். அந்தோ! அமைச்சர் அழகேசனார் அவர்களின் ஏசலின் முடிவு பயங்கரமானதாகவும் இருக்கும்—பரிகசிக்கப்படத்தக்கதாகவும் இருக்கும்.

# சுமத்திராவின் விடுதலை முழக்கம்

## சுகர்ணேவின் கலக்கம்

எழுச்சியை அடக்க யோசனையாம்

ஜகார்தா, ஜன 29—

இந்தோனேஷிய மத்திய சர்க்காருக்கு எதிராக சுமத்திரா மாநிலங்களில் எழுந்த விடுதலை முழக்கம், குடியரசுத் தலைவர் சுகர்ணேவுக்குப் பெரும் கலக்கமளித்திருக்கிறதாம்.

இந்தோனேஷியாவின் நிலை இப்போது, 'மோசம்' என்ற கட்டத்தைத் தாண்டி, 'படுமோசம்' என்ற அளவுக்குச் சென்றுவிட்டது என்றும், இப்போதைய (தற்காலிக) அரசியல் சட்டம் சர்க்கார் விவகாரங்களில் தான் தலையிட முடியாதவாறு கட்டுப்படுத்துகிறது என்றும் கூறி, சுகர்ணே வருத்தப்பட்டுக் கொண்டாராம்!

### 3,000 தீவுகள்

இந்தோனேஷியா, சுமார் மூவாயிரத்திற்கும் அதிகமான தீவுகள் அடங்கியதாகும்.

அதில் மிக வளப்பமிகுந்த தீவுகள்தான் வடக்கு, தெற்கு, மத்திய சுமத்திரா மாநிலங்கள்!

### புரட்சி

அங்குதான், மத்திய சர்க்காருக்கு எதிராக விடுதலை எழுச்சியும் புரட்சியும் தோன்றியுள்ளன.

இந்த எழுச்சியைத்தான் மிகமிஞ்சிய மாகாணப் பித்து என்றும் இதை அனுமதிக்கக்கூடாது என்றும் சுகர்ணே கண்டிக்கிறார்.

### விடுதலை வீரன்

பெரும் விடுதலை வீரன் என்று போற்றப்படும் சுகர்ணே, சுமத்திரா மக்களின் எழுச்சியைக் கண்டித்திருப்பதுடன், உபதேசப்புரியவும் முற்பட்டிருப்பது பலருக்கு வியப்பளித்திருக்கிறதாம்!

### கோருவதென்ன?

சுமத்திரா மாநிலங்கள், தங்கள் தங்கள் விவகாரங்களைக் கவனித்துக்கொள்ள தங்களுக்குப் போதுமான அதிகாரமும் சுதந்திரமும் கொடுக்கப்படவில்லை என்று மத்திய சர்க்கார் மீது குற்றம்சாட்டி, தனிச் சுதந்திர நாடுகளாகத் தங்களைப் பிரகடனப்படுத்திக்கொண்டு, தனியரசு அமைத்துக்கொள்ள வேண்டுமெனக் கோரியுள்ளன.

### உபதேசம்

இந்தியத் துணைக் கண்டத்துப் பிரதமர் பண்டித நேருவைப் போலவே சுகர்ணேவும் 'இந்தோனேஷியா சுதந்திரமாக இருக்க வேண்டுமானால் ஒற்றுமை அவசியம்' என்று உபதேசம் புரிந்திருக்கிறாராம்!

### எழுச்சியை அடக்க!

விடுதலை எழுச்சியை அடக்குவதற்காக தான் வெளியிட்டுள்ள சில யோசனைகளை மக்கள் ஏற்றால், அவை உள்நாட்டு நிலைகளைச் சரிசெய்யவும் தற்காலிக அரசியல் சட்டத்தின் குறைகளை நீக்கவும் பயன்படும் என்றும் சுகர்ணே கூட்டம் ஒன்றில் கூறியுள்ளாராம்.

# அணு உலையில் உருவாகும் கதிரியக்க பொருள்கள்

ஆக்க வேலைகட்கு பயன்படுவது பற்றி தகவல்

ரேடியோ ஐசோடோப்புகள் என்பவை அணு உலையில் கதிரியக்கமுள்ளவைகளாக ஆக்கப்பட்ட இரும்பு, பாஸ்பரஸ், அயோடின் முதலியவை போன்ற சாதாரணப் பொருள்கள்!

மைக்ரோஸ்கோப் கண்டுபிடிப்புக்குப் பின்னர் கண்டுபிடிக்கப்பட்ட மிகவும் முக்கியமான ஆராய்ச்சிக் கருவி இவைகளே என்று விஞ்ஞானிகள் கூறுகிறார்கள்.

புற்று நோய்களுக்கும் மற்ற நோய்களுக்கும் சிகிச்சை செய்வதற்கும் அவை பயன்படுத்தப்படுகின்றன. மருத்திலும், விவசாய ஆராய்ச்சியிலும், தொழிற்சாலை சோதனைகளிலும், அளவைக் கருவிகள் விஷயத்திலும் அவற்றின் உபயோகம் பல நாடுகளில் விரைவாய்ப் பரவிவருகிறது.

அணு உலையில் பிறக்கும் ந்யூட்ரான்களைக்கொண்டு சாதாரணப் பொருள்களைத் தாக்கும்போது அவை கதிரியக்கமுள்ளவை ஆகின்றன; அவ்வாறு சுமார் 500 வெவ்வேறு ரேடியோஐசோடோப்புகளை உற்பத்தி செய்ய முடியும் என்று பௌதிக விஞ்ஞானிகள் கண்டுபிடித்திருக்கிறார்கள்.

இந்தப் பொருள்கள் தொழில் துறையில் பலவற்றிற்குப் பயன்படுகின்றன. பின்வருபவை அவற்றுள் சில:—

பொருள்களின் திண்மையை மிகமிக நுண்மையாக அளவிடுதல்; பொருள்கள் உழைத்து எந்த நிலைமையில் உள்ளன என்பதை விரைவாகவும் நுட்பமாகவும் சோதனை செய்தல்; மற்ற முறைகளால் கண்டுபிடிக்க முடியாத ஓட்டைகள் உள்ள இடத்தைக் கண்டறிதல்; பூமிக்குக் கீழுள்ள வாயுக்களை ஆராய்தல்; உலோக பொருள்களின் உட்புறத்திலுள்ள குறைபாடுகளைக் கண்டுபிடித்தல்.

# தொழிலாளர்கட்குத் தொழில் கல்வியாம்!

திட்ட ஆலோசனைகள் கூற நிபுணர்கள் குழுவாம்!

புதுடில்லி, சன 28—

தொழிலாளர்களுக்குத் தொழிற்சங்கம், தொழில் நிர்வாகம் ஆகியவை குறித்துக் கல்வி அளிப்பது குறித்த எல்லா அம்சங்களையும் அடக்கிய விரிவான திட்டங்கள் வகுப்பதில் தங்களுக்கு ஆலோசனை வழங்குவதற்காக, இந்தியப் பேரரசு 8 பேரடங்கிய நிபுணர்கள் குழு ஒன்றை நியமித்துள்ளதாம்.

'போர்டு' நிறுவனத்தின் ஒத்துழைப்புடன் இந்தக் குழு நியமிக்கப்பட்டிருப்பதாகவும், இக்குழு தொழிற்சங்க நிறுவனங்களின் நிர்வாகம், நிதி பற்றிய நுணுக்கமான அம்சங்கள், கொள்கைகள் குறித்துத் தொழிற்சங்கப் பிரதிநிதிகளுக்கு திட்டவட்டமான ஆலோசனைகள் வழங்கும் என்றும் தெரிகிறது.

மேலும், நிர்வாகத் துறையில் பங்கு கொள்வதற்கான பொறுப்புகள், தகுதிகள் பற்றியும் தொழிற்சங்கப் பிரதிநிதிகளுக்கு இக்குழு அறிவுரை வழங்குமாம்.

இது தவிர, இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் தொழிலாளர் கொள்கை குறித்துக் கூறப்பட்ட சிபாரிசுகளின்படி தொழிலாளர்களுக்கு தொழிற்சங்கத் தத்துவம், நிர்வாகமுறை ஆகியவைகளுக்கான பயிற்சியும் அளிக்கப்படுமென்றும் அறிவிக்கப்பட்டிருக்கிறது.

## திருவனந்தபுரத்தில் மாணவர் ஆர்ப்பாட்டம்

இன்று பல்வேறு பகுதிகளில் நடைபெற்ற ஆர்ப்பாட்டத்தில், மாணவர்கள், அரசாங்கப் பஸ்கள் பலவற்றின் மீது கற்களை வீசியுள்ளனர்; அதன் காரணமாக 12 மாணவர்கள் கைது செய்யப்பட்டுள்ளனர். 2 பஸ்கள் முழுமையிலும் சேதமடைந்து விட்டனவாம். மற்றும் 15 பேர் தடையுத்தரவை மீறியதாகக் கைதுசெய்யப்பட்டுள்ளனர்.



# கோவில்பட்டி தி. மு. கழக தோழர் வழக்கு

## குற்றம் நிரூபிக்கப்படவில்லை என்று தீர்ப்பு

திருநெல்வேலி, சன. 28—

கோவில்பட்டியைச் சேர்ந்த தோழர் சவுந்திரபாண்டியன் என்பவரை, சதிசெய்து கொலை செய்தார்கள் என்று கோவில்பட்டி இராசா மணியக்காரர், வேலுக்குமைபன், மற்றும் தி. மு. க.-வைச் சேர்ந்த காசி மாரியப்பன் என்ற மூவர் மீதும் தொடரப்பட்ட வழக்கினை விசாரித்த நெல்லை அடிஷனல் செஷன்ஸ் நீதிபதி, எதிரிகள் கொலை செய்தனர் என்பதற்கு ஆதாரமில்லையென்று கூறி அவர்களை விடுதலை செய்து தீர்ப்பு வழங்கியிருக்கிறார்.

3-வது எதிரியான தி. மு. க. காசி மாரியப்பனுக்கு சவுந்திரபாண்டியன் இடைஞ்சலாக இருந்தார் என்றும், அதனால் அவர் மற்ற இரண்டு பேருடன் சேர்ந்து சதி செய்து, சவுந்திரபாண்டியனை வேல் கம்பால் குத்திக் கொலை செய்தார் என்றும் பிராசிக்யூஷன் தரப்பில் கூறப்பட்ட குற்றச்சாட்டுகளை எதிரிகள் மறுத்தனர்.

வழக்கை விசாரித்த நீதிபதி, சம்பவம் குறித்த உண்மைகளை யாரும் சொல்ல முன்வரவில்லையென்றும், முக்கிய சாட்சிகள் இரண்டு பேரின் வாக்குமூலங்கள் முரண்பட்டிருக்கின்றன என்றும், மேலும் சில சாட்சிகள் கீழ் கோர்ட்டில் கொடுத்த சாட்சியங்களை ஒரு வேளை மறுக்கலாமென பிராசிக்யூஷன் தரப்பில் சந்தேகம் இருப்பதாகவும், எதிரிகள்தான் இக்கொலை செய்தனர் என்பதைச் சந்தேகமின்றிக் கூற போதிய சாட்சிகள் இல்லையென்றும், எனவே தாம் அவர்களை விடுதலை செய்வதாகவும் கூறி தீர்ப்பளித்திருக்கிறார்.

# திருச்சியில் கைத்தறித் தொழிலாளர் மாநாடு

பிப்ரவரியில் நடைபெறும்?

திருச்சி, சன 28—

திருச்சி மாவட்டக் கைத்தறி நெசவாளர் சங்கத்தின் உறுப்பினர் கூட்டம், கடந்த 21-ந் தேதியன்று திரு எ. எஸ். கிருஷ்ணமூர்த்தி தலைமையில் நடைபெற்றுள்ளது.

வருகிற பிப்ரவரி மாதம் 16, 17-ந் தேதிகளில், திருச்சி—உறையூரில், திருச்சி மாவட்டக் கைத்தறி நெசவுத் தொழிலாளர் 3-வது மாநாடு நடத்துவதென கூட்டத்தில் முடிவு செய்யப்பட்டிருக்கிறது.

நெசவுத் தொழிலாளரின் வாழ்க்கைத்தரத்தைப் பாதுகாத்து உயர்த்தவும், தொழில் தேக்கத்தை நீக்கி தொழில் வளர்ச்சி காணவும் வழிவகை செய்யவே இம்மாநாடு கூட்டப்படுவதாகவும் கூட்டத்தில் விளக்கப்பட்டது.

மாநாட்டு வரவேற்புக் குழுத் தலைவர், செயலாளராக முறையே தோழர்கள் எ. எஸ். கிருஷ்ணமூர்த்தி, எம். சி., கே. எஸ். மணி ஆகியோர் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கின்றனர். (ச. தி.)

## கொள்ளேகாலம் பகுதி பிரிந்ததின் விளைவு

சென்னை, சன. 24—

பட்டுப்பூச்சி வளர்ப்புக்குத் தேவையான முசுக்கட்டைச் செடி பதியம்போட, சேலம் மாவட்டம் ஓசூரில் ஒரு தோட்டம் ஏற்படுத்தப்படுமாம்.

இதற்கு சென்னை அரசாங்கம் ரூ. 34,877-ம், மத்திய அரசாங்கம் ரூ. 19,569-ம் அளித்துள்ளனவாம்.

கொள்ளேகாலம் பகுதியைத் தமிழகத்திலிருந்து பிரித்து மைசூருடன் சேர்த்துவிட்டதன் விளைவாகத் தற்போது பட்டு நூலைப் பிரிக்கும் தொழிற்சாலை சென்னை மாநிலத்திற்கு இல்லாமற்போய் விட்டது; எனவே, தமிழகத்தில் உற்பத்தியாகும் பட்டுப் பூச்சிகூடுகளை மைசூருக்கு விற்பனை செய்ய வேண்டியிருக்கிறது.

## எகிப்து அரசாங்கத்தின் மற்றொரு நடவடிக்கை

எதிரி நாடுகளுக்குச் சொந்தமான 61 இன்சூரன்ஸ் கம்பெனிகளின் பெயர்களை, பதிவுப் புத்தகத்திலிருந்து நீக்கும்படி எகிப்து அரசாங்கம் உத்தரவு பிறப்பித்துள்ளதாம்.

# சம்பளம் வாங்க மறுப்பார்களாம்!

26,000 இரயில் நிலைய அதிகாரிகள் முடிவு

கல்கத்தா, சன 28—

இந்தியா முழுவதிலும் இரயில் நிலைய அதிகாரிகளாகப் பணியாற்றும் 26,000 பேர் இந்த மாத ஊதியத்தைக் குறித்த தேதியில் வாங்குவதில்லை என்று முடிவு செய்துள்ளனர்.

தங்களுடைய குறைந்தபட்ச ஊதிய கோரிக்கை நிறைவேற்றப்படாததற்கு எதிர்ப்பு தெரிவிக்கவே அவர்கள் இவ்வாறு தீர்மானித்துள்ளனர்.

# 'சுதந்திரம்' பெற்று 10 ஆண்டுகள் ஆகியும் ஏழ்மை ஒழியவில்லை

## உண்மையை ஒப்புகிறார் முதன் மந்திரி காமராசர்

"எல்லோருக்கும் கல்வி வேண்டும்; ஏழ்மை ஒழியவேண்டும் என்பதுதான் நாட்டின் முக்கிய இரண்டு தேவைகள்.

"ஆனால், சுதந்திரம் கிடைத்து 10 ஆண்டுகள் ஆனபின்பும், பொருளாதார சுயராஜ்யத்தை, இன்னும் காணவில்லை; எனவே, இந்த நாட்டு மக்கள், தாங்கள் சுதந்திர தினம் கொண்டாடும்பொழுதெல்லாம் எல்லோருக்கும் கல்வி வேண்டும்—ஏழ்மை ஒழியவேண்டும் என்ற இலட்சியங்களுக்காகப் பாடுபட தங்களைத் தியாகம் செய்துகொள்ளவேண்டும்"

என்று முதன் மந்திரி காமராசர் குடியரசுத் தின விழா' ஒன்றில் பேசுகையில் குறிப்பிட்டிருக்கிறார்.

## விஷத் தூள்களைப் பரப்பாத அணு குண்டுகளாம!

உற்பத்தி செய்வதற்கு அமெரிக்கா ஆலோசனை செய்கிறதாம்!

அபாயகரமான அளவுக்கு விஷத் தூள்களைப் பரப்பாத அணு குண்டுகளை உற்பத்தி செய்வதில் அமெரிக்கா ஆலோசனை செய்து வருகிறது என்றும், அமெரிக்கா இவ்விதம் முயலுகிற நேரத்தில், தொடர்ந்து அணு ஆயுதப் பரிட்சை நடைபெறுவதைத் தடுத்து நிறுத்தக்கூடாது என்றும், ஆயுதக் கலைப்புப் பிரச்சினையில் ஐசன்ஹவருக்கு ஆலோசகராக இருக்கும் ஸ்டாசன் என்பார் கூறியிருக்கிறாராம்.

# சவமொழிக்கு உயிரூட்ட முயற்சி!

காசி, சன. 29—

சவமொழியைப் பரப்புவதற்காக, பார்ப்பனரின் பரம்பரைப் பழக்கமான பாத்திரமேந்தி 'பிட்சாந்தேகி' என்று கோஷித்துப் பிச்சையெடுக்கும் முறையையும் மேற்கொள்ளப் போகிறார்களாம்!

இந்த முறையை காசி சவமொழிப் பிரசாரச் சங்கத்தவர் மேற்கொள்ளுவாராம்!

வீடு வீடாகப் பிட்சா பாத்திரம் ஏந்திச் சென்று சவமொழி வளர்ச்சிக்குப் 'பிச்சை' போடுமாறு கேட்பாராம்!

தனது இந்த முயற்சிக்கு மக்கள் ஆதரவு தரவேண்டும் என்று வேண்டுகோள் விடுத்திருக்கிறதாம் சங்கம்.

***********************************

தேர்தல் பிரச்சாரப் பாடல்கள்:

## 'உதய சூரியன்' பெட்டியில் ஓட்டுப் போடுவீர்!

('மாசிலா உண்மைக் காதலே....' என்ற மெட்டு)

நாடுவார் இந்த நேரமே
நாளுமே வாழ்வை நாச மாக்கினோர்!
தேடி வந்தே ஓட்டுக் கேட்பார்!
தேசியம் பேசி நம்மை மேலும் வாட்டவே!

கேடுதான் கொஞ்ச மாகுமா?
கேட்டிடாக் காது கொண்டோர் ஆட்சியில்!
வாடுதே தென்னகந்தான் வாழ்வு கெட்டுமே!
வடக்கின வாழவைக்கும் வஞ்ச நெஞ்சரால்!
(தேடி வந்தே)

உதய சூரியன் உதித்தான் உங்கள் வாழ்விலே
உரிமை யோங்கவே, கொடுமை யாவும் நீங்கவே!
உண்மை யாய்நீர் உங்கள் ஓட்டை
உதயசூ ரியன் பெட்டி தன்னில் போடுவீர்!
(நாடுவார்)

—புதுவைச் சிவம்

***********************************

# சேலத்தில் 'சந்திரோதயம்' நாடகம்

## மக்களுக்கு அண்ணு வேண்டுகோள்

சேலம், சன. 28—

திராவிட முன்னேற்றக் கழகத் தேர்தல் நிதிக்கென சேலம் நகர தி. மு. கழகச் சார்பில், கடந்த 22-ந் தேதியன்று இரவு, சேலம் பிரபாத் டாக்கிஸில், அண்ணு அவர்களும், மற்றும் கழகத் தோழர்களும் நடித்த 'சந்திரோதயம்' நாடகம் நடைபெற்றது.

நாடக இறுதியில், அண்ணு, பொதுச்செயலாளர் இரா. நெடுஞ்செழியன், தோழர்கள் ஈ. வெ. கி. சம்பத், கே. ஏ. மதியழகன் ஆகியோர் மேடையில் அமர்ந்திருந்தனர்.

நகரச் செயலாளர் தோழர் இ. ஆர். கிருஷ்ணன் அவர்கள், நாடகத்திற்கு வருகை தந்திருந்த அனைவருக்கும் நன்றி தெரிவித்துக் கொண்டார்.

பின்னர், நாடகம் மூலம் வசூலான ரூ. 5,977-ல் செலவு சுமார் ரூ. 1,500 போக, மீதி தொகையை, தி. மு. கழகத் தேர்தல் நிதியாகப் பொதுச் செயலாளர் அவர்களிடம் அளித்தார்.

நிதியைப் பெற்றுக்கொண்ட பொதுச்செயலாளர் தமது நன்றியைத் தெரிவித்துக்கொண்டார்.

இறுதியாக அண்ணு அவர்கள் சேலம் நகரக் கிளையைப் பாராட்டியும், வரும் பொதுத் தேர்தலில் கழகத்தின் சார்பில் போட்டியிடும் அபேட்சகர்களை ஆதரிக்குமாறும், குறிப்பாக சேலம் தொகுதியில் போட்டியிடும் பொதுச்செயலாளர் இரா. நெடுஞ்செழியன் அவர்களை ஆதரித்து அவரைச் சிறந்த முறையில் பயன்படுத்திக்கொள்ளுமாறும் கேட்டுக்கொண்டார். (ந-நி.)

# 9,000 ஆசிரியர்கள் வேலைநிறுத்தம்

## பீகார் மாநிலத்தில் நடவடிக்கை

பாட்ணு, சன 28—

பீகார் மாநிலத்தில் 800 பள்ளிகளைச் சேர்ந்த சுமார் 9,000 இடைநிலைப்பள்ளி ஆசிரியர்கள், வருகிற மாதம் 7-ந் தேதிமுதல் வேலை நிறுத்தம் செய்வதென முடிவு செய்திருக்கின்றனராம்.

பிப்ரவரி மாதம் 2-ந் தேதிக்குள்ளாக தங்களுடைய ஊதிய உயர்வுப் பிரச்சனை, உத்தியோக நிபந்தனைகளை செளகரியப்படுத்தும் பிரச்சனை ஆகியவற்றை சர்க்கார் பைசல் செய்யாவிட்டால், மேற்கண்ட நடவடிக்கையை மேற்கொள்வதென முடிவு செய்து, அதனையொட்டி, அந்தப் பள்ளி நிர்வாகத்தினருக்கு அறிவிப்புகளும் விடுத்திருக்கின்றனராம்.

இதனிடையில், இது பிரச்சினை சம்பந்தமாக அரசாங்கம் பேச்சு வார்த்தை நடத்த முன்வந்தால் மேற்படி சங்கம் அதற்குத் தயார் என்றும், ஆனால், ஆசிரியர்களுக்குப் பிராவிடண்ட் பண்டு அளிப்பது பற்றிய கோரிக்கை உட்பட எல்லா கோரிக்கைகளும் ஏற்றுக் கொள்ளப்பட்டாலொழிய, வேலை நிறுத்தத்தைக் கைவிடுவதில்லையென்றும், ஆசிரியர்களெல்லாம் கோஷ்டி கோஷ்டியாகச் சத்தியாக்கிரகத்தில் ஈடுபடுவரென்றும், பீகார் இடைநிலைக் கல்வி ஆசிரியர் சங்கத் தலைவர் சின்ஹா என்பார் அறிவித்திருக்கிறார்.

## அநாதை கடவுள்களுக்கு அரசாங்க உதவி

இராகுட் அணைக்கட்டுப் பகுதியில் இருந்த கிராம மக்களுக்கு வேறு இடத்தில் குடிபுக அரசாங்கம் வழி செய்தனது. ஆனால், அந்தக் கிராமங்களிலிருந்து அப்புறப்படுத்தப்பட்ட தெய்வச் சிலைகளுக்கு இன்றுவரை அரசாங்கம் ஒரு முடிவு தேடாது, பொது மக்களின் வரிப்பணத்திலிருந்து அச்சிலைகளைப் பாதுகாத்து வருகிறது!

## 8-இலட்சம் பேர்கள் பணிபுரியும் தொழில்துறை

இந்தியத் தோல் தொழில் துறையில் சுமார் 8 இலட்சம் தொழிலாளர்கள் வேலை செய்து வருகின்றனர்; இத்தொழில், ஆண்டொன்றுக்கு ரூ. 23 கோடிக்கு மேல் மதிப்புள்ள வெளிநாட்டு நாணயச் செலவாணியைச் சம்பாதித்து வருகிறது.

# தி. மு. கழகத் தேர்தல் நிதி அளிக்க!

மருத்துவர் சங்க முயற்சி - வேண்டுகோள்

சென்னை, சன. 29—

திராவிட முன்னேற்றக் கழகத்திற்கு மருத்துவர் சங்கச் சார்பில் தேர்தல் நிதி அளிப்பதென முடிவு செய்யப்பட்டிருக்கிறது.

இம்முடிவையொட்டி, வருகிற பிப்ரவரி திங்கள் 19-ம் நாள் சென்னை - சிந்தாதிரிப்பேட்டையில் மருத்துவர் சங்கச் சார்பில் ஒரு பொதுக்கூட்டம் நடத்தி, அக்கூட்டத்தில் தேர்தல் நிதி அளிப்பதென்றும் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது.

மருத்துவர் சங்கத்தின் இம்முயற்சியில் பெரும் வெற்றி காண, மருத்துவத் தொழில் புரியும் சித்த வைத்தியர்கள், மருத்துவத் தாய்மார்கள், நாதசுர இசைவாணர்கள், முடிதிருத்தத் தொழிலாளர்கள் அனைவரும் தங்களாலியன்ற பொருளுதவியும் ஏனைய உதவிகளையும் செய்யுமாறு, மேற்படி சங்கத்தால் கேட்டுக்கொள்ளப்பட்டிருக்கின்றனர்.

# விரிவான அளவில்!

கல்வி அமைப்புப் பற்றி பரிசீலனை செய்ய முடிவாம்!

புதுடில்லி, சன 28—

நாட்டிலுள்ள கல்வி அமைப்பு குறித்து விரிவான அளவில் சர்வே ஒன்றினை, அந்தந்த மாநில சர்க்கார்களுடன் சேர்ந்து நடத்துவதென மத்திய சர்க்கார் முடிவு செய்துள்ளனராம்.

நாட்டில் தற்போதுள்ள கல்வி வசதிகள் குறித்தும், எதிர்காலத்தில் அதனை அபிவிருத்தி செய்வது குறித்தும் திட்டமிடுவதே இந்த சர்வேயின் நோக்கம் என்றும், ஆரம்பக் கல்வி, உயர்நிலைக் கல்வி, தொழில் நுட்பக் கல்வி ஆகியவை பற்றித் தனித் தனியே சர்வே செய்யப்படும் என்றும் தெரிகிறது.

இதையொட்டி வருகிற திங்களில், மீரட் மாவட்டத்தில் ஒரு பரீட்சார்த்த ஆரம்பக் கல்வி சர்வே நடத்தப்பட இருக்கிறதாகவும் தகவல் தரப்பட்டிருக்கிறது.

இந்த ஆண்டிலேயே ஆரம்பக் கல்வி சம்பந்தமான சர்வே அனைத்தும் முடிவுற்றுவிடும் என்றும் எதிர்பார்க்கப்படுகிறதாம்.

## துருக்கியிலிருந்து பாகிஸ்தானுக்கு

3,000 மைல்நீளமுள்ள முக்கியப் பாதை அமையுமாம்

அமெரிக்கத் தலைவரின் மத்திய கிழக்கு நிதி உதவித் திட்டத்தின் கீழ், துருக்கியிலிருந்து பாகிஸ்தானுக்கு 3,000 மைல் நீளமுள்ள முக்கிய பாதை அமைப்பதென முடிவு செய்யப்பட்டிருக்கிறதாம்.

துருக்கி, இராக், ஈரான் வழியாக பாகிஸ்தான் வரையில் இந்தப் பாதை அமையுமாம்.

## 39,270 அடி நீளமுள்ள சுரங்கப்பாதை!

பாரிஸ், சன. 29—

பிரான்ஸ்—இத்தாலி நாடுகளின் இருபகுதிகளை இணைக்கும் சுரங்கப் பாதை ஒன்று அமைக்கப்படும் என்றும், இதன் நீளம் 39,270 அடிகள் என்றும், இதைக் கட்டி முடிக்க மூன்றாண்டுகளாகுமென்றும் செய்தி ஒன்று தகவல் தருகிறது.

# பொதுத் தேர்தல்

தபால்-தந்தி இலாகா ஏற்பாடுகள்

சென்னை, ஜன 28—

1957 பிப்ரவரி 24, மார்ச் 14 ஆகிய தேதிகளுக்கு இடையே உள்ள காலத்தில் பொதுத் தேர்தலை முன்னிட்டு தபால்-தந்தி இலாகா சில முக்கிய ஏற்பாடுகளைச் செய்திருக்கிறது.

1. தேர்தல் அதிகாரிகளுக்கு அனுப்பப்படும் பாக்கெட்டுகள் (வி. பி தவிர) இன்ஷ்யூர் செய்யப்படாத பதிவுக் கடிதங்கள், முகவரியைக் குறிப்பிட்ட சில அஞ்சல் நிலயங்களில் 'தாமதக் கட்டணம்' (லேட் பீ) பெற்றுக்கொண்டு ஞாயிற்றுக் கிழமைகளிலும், மற்ற தபால் நிலைய விடுமுறை நாட்களிலும் பெறப்படும்.

2. தபால் நிலைய விடுமுறை நாட்களில் வி பி, இன்ஷ்யூர் அல்லாத மற்றப் பதிவுக் கடிதங்கள் பாக்கெட்டுகள், அஞ்சல் நிலயங்களில் 'விண்டோ டெலிவரி' செய்யப்படும்.

3. சென்னையில் உள்ள தலைமை அஞ்சல் நிலயம் (ஜி பி. ஓ'), மவுண்ட்ரோடில் உள்ள அஞ்சல் நிலயம் ஆகியவைகள் ஞாயிற்றுக் கிழமை உட்பட எல்லா நாட்களிலும் இரவு நேரத்திலகூடப் பணியாற்றும்.

4. கடமாடும் தபால் நிலயங்களையும் ஞாயிறு, மற்ற விடுமுறை நாட்களிலும் பயன்படுத்திக் கொள்ள வசதி செய்யப்பட்டுள்ளது.

5. தேர்தலை முன்னிட்டு தபால்-தந்தி போக்குவரத்து அதிகரித்துள்ளதால் அஞ்சல் நிலயங்களின் வேலை நேரமும் நீடிக்கப்படும்.

6. அவசியமான இடங்களில் தந்திகளையும் பதிவு அஞ்சல்களையும் பெற அதிகப்படியான வசதி செய்து தரப்படுமாம்.

7. 'தொலை பேசி' (டெலிபோன்) வேண்டும் என்பவருக்கு தற்காலிகமாக இணைப்புகள் செய்து தரப்படும்.

8. கட்சிகளுக்கும் பத்திரிகைகளுக்கும், நிருபர்களுக்கும் 'தொலை பேசி' வசதி முறையாக செய்து தரப்படுமாம்.

9. தேர்தல் பற்றிய அஞ்சல்களைத் துரிதமாக விநியோகம் செய்ய ஊழியர்களுக்கு உத்தரவு பிறப்பிக்கப்பட்டிருக்கிறது.

10. அதிக வசதி வேண்டும் என்போர் அதிகாரிகளிடம் அறிவித்தால் செய்து தரப்படும்.

# டால்மியா மீது மோசடி வழக்கு

புதுடில்லி, ஜன 29—

சேத் இராமகிருஷ்ண டால்மியா, மற்றும் எட்டுபேர் மீது தொடரப்பட்ட மோசடி வழக்கு இன்று விசாரணைக்கு மாவட்ட மாஜிஸ்திரேட் சர்மாமுன் எடுத்துக்கொள்ளப்பட்டது.

இந்த மோசடி வழக்கில் பாரத் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனியின் பெயரால் ரூ 2 85 00 000 மோசடி செய்ததாகக் குற்றம் சாட்டப்பட்டுள்ளது.

தொடரப்பட்ட வழக்கில், சான்று குறிப்புகள் சுமார் 5,000 இருப்பதால், அவைகளை ஆராய்வதற்குப் போதிய அவகாசம் வேண்டும் என்று எதிரிகளின் சார்பில் வழக்கறிஞர் காலியா கேட்டுக்கொண்டார்.

இத்தகைய மோசடி வழக்குகள் நீண்ட நாள் விசாரணையில் இருக்கக்கூடாது என்றும், எதிரிகள் மேலும் சில வழக்கறிஞர்களை உதவிக்கு அமர்த்திக்கொண்டு துரிதமாக வழக்கை விசாரணை செய்ய ஏற்பாடு செய்யவேண்டும் என்றும் கூறி, வழக்கை மார்ச் 18-ம் தேதிக்கு தள்ளிப்போட்டு தலைவர் தந்தார்.

இந்தியாவில் 1955—56-ம் வருடத்தில் இரும்புக் கனி 5,2,69,020 டன்னும், மாங்கனீஸ் கனி 16,00,000 டன்னும், செம்பு 7 281 டன்னும் தங்கம் 2,11 461 அவுன்சும், வெள்ளி 1 52 883 அவுன்சும் உற்பத்தியாயிற்றும்.

# நாடகப் பேராசிரியருக்குப் பாராட்டு விழா

## தென்னிந்திய நடிகர் சங்க வேண்டுகோள்

"நாடகப் பேராசிரியர் திரு. ப. சம்பந்தனார் அவர்களின் 85-வது பிறந்த நாளை முன்னிட்டு, சென்னை நகரசபையின் சார்பில் பாராட்டு விழா ஒன்று 1-2-57 மாலை 5-30 மணிக்கு சென்னை கார்ப்பொரேஷன் ஸ்டேடியத்தில் நடைபெறும். அவ்வமயம், நாடகப் பேராசிரியருக்கு நகரசபையின் சார்பிலும், தென்னிந்திய நடிகர் சங்கத்தின் சார்பிலும், பல்வேறு கலை மன்றங்களின் சார்பிலும் பாராட்டு இதழ்கள் வழங்கப்படும்.

"அவ்விழாவில் கலந்துகொள்வதற்காக மவுண்ட்ரோடு 'சுகுண விலாச சபா' கட்டிடத்திலிருந்து (பிளாசா டாக்கீஸ்) நடிகர் சங்கத்தின் சார்பில் கலைஞர்கள் புடைசூழ நாடகப் பேராசிரியர் அவர்கள் மாபெரும் ஊர்வலத்துடன் அழைத்துச் செல்லப்படுவார்கள்.

"ஊர்வலத்தில் கலைஞர்களும், கலையுலகத் தொடர்புடையவர்களும், பொதுமக்களும் பெரும் அளவில் கலந்துகொண்டு சிறப்பிக்கும்படி கேட்டுக்கொள்கிறோம்.

"ஊர்வலம், 'சுகுண விலாச சபா'க் கட்டிடத்திலிருந்து 1—2—57 மாலை 3-30 மணிக்குப் புறப்படும்.

"நாடகப்பேராசிரியருக்கு வாழ்த்துக்கள் அனுப்புவோர், 'தென்னிந்திய நடிகர் சங்கம், 162-எ. இராயப்பேட்டை ஐரோடு, சென்னை-4' என்ற முகவரிக்கு அனுப்பும்படி தெரிவித்துக்கொள்கிறோம்."

என்று, தென்னிந்திய நடிகர் சங்கப் பொதுச் செயலாளர்களான தோழர்கள் எம் ஜி இராமச்சந்திரன், எஸ் எஸ் இராஜேந்திரன் அறிவிக்கின்றனர்.

# கழகக் கூட்டம்

★

சேந்தமங்கலம்:
பெருமாள் கோவில் முன்
1—2—57 மாலை 7½ மணிக்கு
தலைவர்: என். பெரியசாமி
பேசுவோர்:
ஈ. வெ. கி. சம்பத்
ஜி பி. சோமசுந்தரம்

## சென்னை—பழைய ஆட்டு தொட்டிசாலை தி. மு. கழக ஆதரவாளர்கட்கு:

30-1-57 இரவு 8-மணிக்கு சென்னை — பழைய ஆட்டு தொட்டி பேட்டையில் கே. வி. கே. சாமி நினைவு மன்றம் ஒன்று திறப்பது குறித்த ஆலோசனைக் கூட்டம் ஒன்று முத்துமாரியம்மன் கோயில் தெரு எண். 52, தோழர் வ. முனுசாமி இல்லத்தில் நடைபெறும். கழக ஆதரவாளர்கள் அனைவரும் தவறாது வருகைதரக் கேட்டுக் கொள்ளப்படுகின்றனர்.

# வேலையில்லாத் திண்டாட்டம்

சேலம் கைத்தறி நெசவாளரிடை ஏற்படக்கூடுமாம்

சேலம், ஜன. 29—

"வேகமாக உற்பத்தி செய்யப்பட்டு தேங்கியுள்ள கைத்தறித் துணிகளை விநியோகிப்பதற்கு உடனடியாக தக்க நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ள விட்டால் சேலம் கைத்தறி நெசவாளரிடை வேலையில்லாத் திண்டாட்டம் ஏற்படும்"

என்று சென்னை மாநில கைத்தறி சம்மேளனத்தின் செயலாளர் சேலம் எ. சித்தையன், கைத்தறி டைரக்டரிடம் எடுத்துரைத்திருக்கிறார்.

## வால்பாறை துப்பாக்கிப் பிரயோக எதிரொலி

விசாரணை அதிகாரி நியமனம்

சென்னை, ஜன. 29—

ஜனவரி 26-ம் தேதியன்று வால்பாறையில் போலீசார் துப்பாக்கிப் பிரயோகம் செய்தது பற்றி விசாரிக்க ரெவின்யூ போர்டு இரண்டாவது உறுப்பினரான டி. எஸ் எஸ். இராகவன் அவர்களை விசாரணை அதிகாரியாக சென்னை அரசாங்கம் நியமித்திருக்கிறது.

இவ்விசாரணை, 31-ம் தேதியன்று வால்பாறையில் நடைபெறக்கூடும்.

## சுரங்கத் தொழிலாளருக்கு ஒரு மாத போனஸ்

புதுடில்லி, ஜன. 29—

மூன்று தங்கச் சுரங்கங்கள், அவற்றுடன் இணைந்துள்ள தொழிலகங்கள் ஆகியவற்றில் பணியாற்றும் தொழிலாளர்களுக்கு 1954-ம் ஆண்டிற்கு ஒவ்வொருவருக்கும் ஒரு மாத அடிப்படைச் சம்பளத்தைப் போனசாக வழங்குமாறு இந்தியத் தலைமை உயர் நீதிமன்றம், மைசூர் அரசாங்கத்திற்கு உத்தரவு பிறப்பித்துள்ளது.

இதனால் 18,000 தொழிலாளர்கள் நன்மை பெறுவர்; ரூ 7-இலட்சம் மைசூர் அரசாங்கத்திற்குச் செலவாகும்.

## 11,100 கிராமங்களுக்கு மின்சார வசதியாம்!

இரண்டாவது திட்ட காலத்தில் சுமார் 11,100 கிராமங்களுக்கும் நகரங்களுக்கும் மின்சார வசதி ஏற்படுத்த உத்தேசிக்கப்பட்டிருக்கிறது.

# அண்ணா தொகுதியில் மகளிர் மன்றச் சேவை

காஞ்சி, ஜன. 30—

வருகிற பொதுத் தேர்தலில் அண்ணா அவர்கள் போட்டியிடும் காஞ்சிபுரம் தொகுதியில் நேற்று முன்தினம், சென்னை மகளிர் மன்றத்தைச் சேர்ந்த தோழியர்கள் சத்தியவாணிமுத்து, நாகரத்தினம் அம்மையார், கிருஷ்ணவேணி-பாலன், ஆர். சகுந்தலா, பி. கலைச்செல்வி, திரிபுரசுந்தரி ஜி பி. அமுதா, வசந்தம் ஆகியோர் சில தெருக்களில் வீடு வீடாகச் சென்று அண்ணா அவர்களுக்கு வாக்களிக்குமாறு ஒவ்வொரு வாக்காளர்களையும் கேட்டுக் கொண்டனர்.

அவர்கள் அனைவரும் அண்ணா அவர்களுக்கே வாக்களிப்பதாக உறுதி தந்தனர்.

## கடலூர் கைத்தறி நெசவாளர் நல்வாழ்வுக் கழகம்

1—2—57 காலை 8½ மணிக்கு கடலூர் ஓ டி. அண்ணா அன்பு நிலயத்தில், கடலூர் கைத்தறி நெசவாளர் நல்வாழ்வுக் கழக அமைப்புக் கூட்டம் நடைபெறும். நெசவாளத் தோழர்கள் அனைவரும் தவறாது வருகைதரக் கேட்டுக்கொள்ளப்படுகின்றனர்.

## மூவர் சந்திப்பு 'பெர்முடாவில்'

வாஷிங்டன் ஜன 29—

அமெரிக்கத் தலைவர் ஐசனோவர் பிரிட்டிஷ், பிரெஞ்சுப் பிரதமர்கள் ஆகிய மூவரும், பெர்முடாவில் சந்தித்துப் பேசக்கூடும் என்று விஷயமறிந்த வட்டாரங்கள் கூறுகின்றன.

## ஆயுதப் பரிசோதனையில் தோல்வி ஏற்பட்டதாம்!

வாஷிங்டன், ஜன 28—

நாடுவிட்டு நாடு சென்று தாக்கும் ஆற்றல் கொண்டதாகக் கூறப்பட்ட 'தார்' எனும் ஆயுதத்தை அண்மையில் அமெரிக்கர்கள் பரிசோதனை செய்ததில் தோல்வியை அணைத்துக் கொண்டிருக்கின்றனர் என்ச் செய்திகள் மூலம் தெரியவந்திருக்கிறது.

இந்த ஆயுதப் பரிசோதனை, புளோரிடாவிலுள்ள பாட்ரிக் விமான தளத்தில் நடைபெற்றதாகவும், இது, முன்னைப்போல் ஒன்றும் இரகசியமாக நடைபெறவில்லையென்றும், இச்சோதனையின் விளைவாக எதுவும் உயிர்ச்சேதம் ஏற்படவில்லையாயினும், பல டன் கனமுள்ள ராக்கெட்டுகள் நாசமாகிவிட்டன என்றும் அறியக்கிடக்கிறது.

## பண்டிதரை எதிர்த்து மூவர் போட்டியிடுகின்றனர்

தாட்டே பின்வாங்கினர்?

அலகாபாத், ஜன 29—

அலகாபாத் தொகுதியில் மக்கள் சபைக்கு பண்டித நேருவை எதிர்த்து ஜனசங்க அபேட்சகர் ஒருவரும், இரண்டு சுயேச்சைகளும் போட்டியிடுகின்றனர்.

முன் அறிவித்தபடி தாட்டே தாக்கல் நியமனப் பத்திரம் தாக்கல் செய்யவில்லை.

## அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் தமிழர் திருநாள்

31—1—57, 1—2—57 ஆகிய இரு நாட்களிலும் தினமும் மாலை 5 மணிக்குமேல், அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழ் இலக்கியக் கழகச் சார்பில், பட்டமளிப்பு மன்றத்தில், முறையே திரு முடியரசன், பி. டி. இராசன் ஆகியோர் தலைமையில் விழா நடைபெறும். விழாவில் கவியரங்கம், கூத்து, இயல், இசை ஆகிய அம்சங்கள் இடம்பெறும்.

★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★

# தமிழ்நாட்டில்

புயலால் - - - அழிவு! அழுகுரல்!

இரயில்விபத்தால் - பிணமலை! ரத்தவெள்ளம்!

ஆறுதல் அளிக்க நேருபண்டிதர் **வரவில்லை!**

ஓட்டுக் கேட்பதற்கு மட்டும் ஓடோடி **வருகிறார்!!**

★

நல்லோரே கூறுங்கள்

# நீதி இதுதானா?

—தலைமைக் கழகம் (தி. மு. க.)

★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★

திராவிட முன்னேற்றக் கழகத்துக்காக தோழர் இரா. நெடுஞ்செழியன், எம்.ஏ. அவர்களால் அழகிரி அச்சகத்தில் அச்சிடப்பெற்று, (24, சூரியநாராயண செட்டித் தெரு, இராயபுரம் சென்னை) வெளியிடப்பெறுகிறது. ஆசிரியர்: இரா. நெடுஞ்செழியன் எம். ஏ.

